# ॥ गोविन्दाष्टकम् ॥
# கோவிந்தாஷ்டகம்

(1)

सत्यं ज्ञानमनन्तं नित्यमनाकाशं परमाकाशं
गोष्ठप्राङ्गणरिङ्गणलोलमनायासं परमायासम् ।
मायाकल्पितनानाकारं भुवनाकारं
क्ष्मामानाथमनाथं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

ஸத்யம் ஜ்ஞான மநந்தம் நித்ய மநாகாசம் பரமாகாசம்
கோஷ்ட ப்ராங்கண ரிங்கணலோல
மநாயாஸம் பரமாயாஸம் ।
மாயாகல்பிதநாநாகாரம் புவனாகாரம்
க்ஷ்மாமாநாதமநாதம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

பூதேவி, லக்ஷ்மி தேவியருக்கு நாதனான கோவிந்தனை நமஸ்கரியுங்கள். அவர் ஸத்ய - ஞான - அனந்தஸ்வரூபி பூர்ணமானவர், மாட்டுத்தொழுவில் தவழ ஆசைப்பட்டவர், களைப்பே இல்லாதவர், ஆனால் களைத்து காணதக்கவர். மாயையாகப் பலவடிவங்கள் கொண்டவர், உலகே உருவானவர் அவர்.

(2)

मृत्स्नामत्सीहेति यशोदाताडनशैशवसन्त्रासं
व्यादितवक्त्रालोकितलोकालोकचतुर्दशलोकालिम् ।
लोकत्रय पुरमूलस्तम्भं लोकालोकमनालोकं
लोकेशं परमेशं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

ம்ருத்ஸ்நா மத்ஸீஹேதி யசோதா
தாடன சைசவ ஸந்த்ராஸம்
வ்யாதித வக்த்ரா லோகித லோகா
லோக சதுர்தசலோகாலிம் ।
லோகத்ரயபுரமூல ஸ்தம்பம் லோகா
லோக மநாலோகம்
லோசேகம் பரமேசம் ப்ரணமத
கோவிந்தம் பரமானந்தம் ॥

குழந்தையாய் இருக்கும்பொழுது, 'மண்ணைத் தின்று விட்டாயே' என்று யசோதை அடித்து, அதட்டினாளே அவரை. உடனே வாயை திறந்தபொழுது பதிநான்கு உலகங்களையும் கண்டு களித்தாளே! மூன்று உலகங்களின் ஆதார ஸ்தம்பம்போல் அமைந்தவரும் அவர்தான். அத்தகைய பரமானந்த கோவிந்தனை நமஸ்கரியுங்கள்.

(3)

त्रैविष्टपरिपुवीरघ्नं क्षितिभारघ्नं भवरोगघ्नं
कैवल्यं नवनीताहारमनाहारं भुवनाहारम्।
वैमल्यस्फुटचेतोवृत्तिविशेषाभासमनाभासं
शैवं केवलशान्तं प्रणमत गोविन्दं परमानन्दम्॥

த்ரைவிஷ்டபரிபுவீரக்னம் க்ஷிதி
பாரக்னம்பவரோகக்னம்
கைவல்யம் நவநீதாஹார
மனாஹாரம் புவனாஹாரம்।
வைமல்யஸ்புட சேதோவிருத்தி
விசேஷாபாஸ மனாபாஸம்
சைவம் கேவலசாந்தம் ப்ரணமத
கோவிந்தம் பரமானந்தம்॥

மூவுலகையும் பகைக்கும் அசுரரை யழித்தவரும், பூபாரத்தையும், ஸம்ஸார நோயையும் அகற்றி கைவல்யம் தருபவரும், ஆஹாரமேதும் வேண்டாதவரெளினும் உலகுக்கு ஆஹாரமானவரும், நவநீதம் என்ற வெண்ணையை ஆகாரமாக்கக் கொண்டவரும், தெளிவாய் இல்லாதவரெனினும் தூயமனதில் தெளிந்திருப்பவருமான கிருஷ்ண பரமாத்மாவை வணங்குங்கள்!

(4)

गोपालं भूलीलाविग्रहगोपालं कुलगोपालं
गोपीखेलनगोवर्धनधृतिलीलालालितगोपालम्।
गोभिर्निगदितगोविन्दस्फुटनामानं बहुनामानं
गोधीगोचरदूरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

கோபாலம் பூலீலா விக்ரஹகோபாலம் குலகோபாலம்
கோபீகேலந கோவர்த்தன த்ருதிலீலா
லாலிதகோபாலம்।
கோபிர்நிகதித கோவிந்த ஸ்புட நாமாநம் பஹுநாமானம்
கோதீகோசரதூரம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

அவர் கோபாலன் எனப்படுகிறார். பூமிதேவி விளையாடும் ஆணழகர், குலபர்வதமேயானவரும்கூட, கோபியரோடு விளையாடுதல், கோவர்தன மலையை தூக்கி நிறுத்தல் போன்ற விளையாட்டுக்களால் யாதவரை மகிழ்வித்தவர், கோவிந்தா, கோவிந்தா என பசுக்களே கூப்பிடும் வண்ணமிருந்தவர். பல பெயருள்ளவர், பசுக்களின் புத்திக்குக்கூட எட்டும் அளவில் உள்ளவர். அத்தகைய பரமானந்த கோவிந்தனை சேவியுங்கள்.

(5)

गोपीमण्डलगोष्ठीभेदं भेदावस्थमभेदाभं
शश्वद्गोखुरनिर्धूतोद्गतधूलिधूसर सौभाग्यम्।
श्रद्धाभक्तिगृहीतानन्दमचिन्त्यं चिन्तितसद्भावं
चिन्तामणिमहिमानं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

கோபீமண்டல கோஷ்டீபேதம் பேதாவஸ்தமபேதாபம்
சச்வத்கோகுர நிர்தூத - உத்கத தூலி தூஸர
ஸௌபாக்யம்।
ச்ரத்தா பக்திக்ருஹீதாநந்தம சிந்த்யம் சிந்தித ஸத்பாவம்
சிந்தாமணி மஹிமானம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

கோபிகளுக்குள் பக்ஷபாதம் வைப்பவர், வெவ்வேறு நிலைகளிலிருந்தும் வித்யாசம் பாராட்டாதவர். பசுக்கள் குளம்பு கிளப்பிய தூசு படிந்தும் அழகானவர், சிரத்தை பக்தி இவற்றிற்கு மகிழ்பவர், ஸத்பாவத்தையே எண்ணுபவர், சிந்தாமணியொத்த பெருமை வாய்ந்தவர் அப்பெருமான். அத்தகைய கோவிந்தனை சேவியுங்கள்.

(6)

स्नानव्याकुलयोषिद्वस्त्रमुपादायागमुपारूढं
व्यादित्सन्तीरथ दिग्वस्त्रा दातुमुपाकर्षन्तं ताः ।
निर्धूतद्वयशोकविमोहं बुद्धं बुद्धेरन्तःस्थं
सत्तामात्रशरीरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

ஸ்நான வ்யாகுல யோஷித்வஸ்த்ர முபாதர
யாகமுபாரூடம்
வ்யாதித்ஸந்தீரத திக்வஸ்த்ரா தாது
முபாகர் ஷந்தம் தா: ।
நிர்தூத த்வய சோக விமோஹம் புத்தம் புத்தே ரந்தஸ்தம்
ஸத்தாமாத்ர சரீரம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

குளித்துக் கொண்டிருக்கும் பெண்களின் துணிகளை எடுத்துக்கொண்டு மரத்தின் மீது ஏறியவர், அவற்றைப் பெற விரும்பி, துணியில்லாத உடம்புடன் கரையேற தவிக்கும் அந்த கோபியரை இழுத்த வண்ணம் விளையாடுகிறார். அவருக்கு சோகமோ, மோகமோ இல்லை, ஞானமே உருவானவர், புத்தியிலுறைபவர் 'எங்கும் உள்ளார்' என்று மட்டும் உணரத் தக்கவர். அத்தகைய கோவிந்தனை சேவியுங்களேன்.

(7)

कान्तं कारणकारणमादिमनादिं कालघनाभासं
कालिन्दीगतकालियशिरसि सुनृत्यन्तं मुहुरत्यन्तम् ।
कालं कालकलातीतं कलिताशेषं कलिदोषघ्नं
कालत्रयगतिहेतुं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

காந்தம் காரண காரணமாதிமநாதிம் காலகனுபாஸம்
காலிந்தீ கத காலிய சிரஸி ஸுந்ருத்யந்தம்
முஹுரத்யந்தம் ।
காலம் கால கலாதீதம் கலிதாசேஷம் கலிதோஷக்னம்
காலத்ரய கதிஹேதும் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

காரணங்களுக்கெல்லாம் மூல காரணமானவர், முதல்வர். ஆனால் முதல் இல்லாதவர்; கருநீல முகில் போன்ற அழகிய திருமேனி படைத்தவர், யமுனையில் இருக்கும் காலியன் மேல் எப்பொழுதும் ஆடுபவர், காலமானவர் ஆனால் காலத்துளிகளுக்கு அப்பாற்பட்டவர், எல்லாம் அறிந்தவர். கலியின் கொட்டத்தை முடக்கியவர். முக்காலமும் செயல்பட இருக்கும் அத்தகைய கோவிந்தனை சேவியுங்கள்!

(8)

बृन्दावनभुवि बृन्दारकगणबृन्दाराधितवन्द्यायां
कुन्दाभामलमन्दस्मेरसुधानन्दं सुमहानन्दम् ।
वन्द्याशेषमहामुनिमानसवन्द्यानन्दपदद्वन्द्वं
नन्द्याशेषगुणाब्धिं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

பிருந்தாவனபுவி ப்ருந்தாரக - கண - பிருந்தா ராதித
வந்த்யாயாம்
குந்தாபாமலமந்தஸ்மேர ஸுதானந்தம்
ஸுமஹானந்தம் ।
வந்த்யாசேஷ மஹாமுனி மானஸ வந்த்யானந்த
பதத்வந்த்வம்
நந்த்யாசேஷ குணுப்திம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம் ॥

தேவர்கள், சித்தர்கள் முதலியோரால் போற்றிப் புகழப்பட்ட விருந்தாவனத்தில் குந்த புஷ்பமென தூய முன்சிரிப்புடன் பேரானந்தம் கொண்டு, அனைத்து முனிவர் மனதிலும் நின்று நிலைபெற்ற திருவடிகளையுடைய, குணக்குன்றான கோவிந்தனை சேவியுங்கள்.

(9)

गोविन्दाष्टकमेतदधीते गोविन्दार्पितचेता यो
गोविन्दाच्युत माधव विष्णो गोकुलनायक कृष्णेति ।
गोविन्दाङ्घ्रि सरोजध्यानसुधाजलधौत समस्ताधो
गोविन्दं परमानन्दामृतमन्तः स्थं स तमभ्येति ॥

கோவிந்தாஷ்டகமேத தத்தே கோவிந்தார்பித சேதா யோ
கோவிந்தாச்யுத மாதவ விஷ்ணோ கோகுல நாயக க்ருஷ்ணேதி।
கோவிந்தாங்க்ரிஸ ரோஜ த்யான ஸுதாஜலதௌத ஸமஸ்தாகோ
கோவிந்தம் பரமானந்தாம்ருத மந்த: ஸ்தம் ஸ தமப்யேதி ॥

கோவிந்த, அச்யுத, மாதவ, விஷ்ணோ, கோகுலநாயக, க்ருஷ்ண என்று கோவிந்தன்பால் மனம் வைத்து இந்த கோவிந்தாஷ்டகத்தை படிப்பவர், கோவிந்தன் திருவடித் தாமரையை தியானம் செய்வதனால் அனைத்து பாபங்களும் நீங்கப் பெற்று அந்தாராத்மாவான பரமானந்த ஸ்வரூபியான கோவிந்தனை அடைவர்.

கோவிந்தாஷ்டகம் முற்றிற்று.

